

# கரு

**மா**ர்கரெட் க்ளினிக்குக்குள் நுழைந்தபோது இன்னும் எந்த டாக்டரும் வந்திருக்கவில்லை. எட்டடிக்க இன்னும் ஏழு நிமிஷங்கள் இருந்தன. லச்சி சாவித்திரி சௌக்கீதார் ரத்தன் ஸிங்குடன் ஏதோ பெரிய ஹாஸ்யத்தைப் பகிர்ந்து கொண்டு நடுவில் ஞாபகம் வரும்போது 'விசுக் விசுக்'கென்று நீள 'ட' வடிவத் தண்டில் சுற்றியிருந்த ஈர ஃபினைல் துணியினால் தரையைத் துடைத்துக் கொண்டிருந்தாள்.

காண்டீன் ஜன்னல் வழியாக எட்டிப்பார்த்த மாதவநாயர் சாவித்திரியின் ஹாஸ்யம் காதில்பட்ட அறிகுறியாக ரத்தன் ஸிங்கைப் பார்த்துச் சிரித்தான். இரண்டு ஆண்களின் கவனம் தன் மேல் பதிந்திருக்கும் பெருமையில் சாவித்திரி யாரையோ (நிச்சயமாக இந்தக் கிளினிக்குக்கு வந்து போகும் ஒரு மேம்ஸாபாக இருக்க வேண்டும்) நாடக பாணியில் பரிகாசம் செய்து கொண்டிருந்தாள். திருத்தமாக மூக்கும் விழியும் இல்லாவிட்டாலும் மஞ்சள் நிற மங்கோலிய முகத்திலும் தீட்சண்யமான பார்வையிலும் வரிசைப் பற்கள் சிரிப்பிலும் ஒரு வசீகரம் இருந்தது. புடவைக்குத் தலைப்பு இருப்பதன் அவசியமே உணராதவள் அவள். எப்பொழுதும் அது ஒரு அனாவசியமான உபரித் துண்டாகக் கீழே தொங்கும் அல்லது காரியம் செய்யும்போது இடுப்பைச் சுற்றி இறுக்கமாகப் பிணைந்

திருக்கும். இடுப்பை இப்பொழுது அது சுற்றியிருந்ததில் இடையும் ஒட்டிய வயிறும், அவை இரண்டுக்கும் சம்பந்தமில்லாத மதர்த்த மார்பகங்களும் மாதவன், ரத்தன் ஸிங்குடைய பார்வைகளைச் சுண்டியிழுப்பது தெளிவாகத் தெரிந்தது.

சிரித்துக் கொண்டே கம்பை 'விசுக் விசுக்'கென்று இழுக்கும் போது தன்னுடைய உடம்பின் கவர்ச்சியை சாவித்திரி முழுவதும் உணர்ந்தவள் போல் ஒரு மெதப்புடன் காணப்பட்டாள். முன்னைக்கு இப்பொழுது ரவிக்கையின் கழுத்து அதிகமாகக் கிழிறங்கியிருந்தது போல் தோன்றிற்று. வேலை முடிந்து ஓய்வாக நிற்கும் சமயங்களில் அந்த இறங்கிய கழுத்தில் தெரியும் பரிணாம எழுச்சியின் தரிசனத்துக்காக மாதவனும் ரத்தன் ஸிங்கும் இலவச டீயிலும் பீடிகளிலும் தங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்வதை மார்கரெட் கவனித்திருக்கிறாள்.

''சீக்கிரம் வேலையை முடி சாவித்திரி! டாக்டர் வர்ற நேரமாயிடுத்து!'' என்று ஒரு சின்ன அதட்டல் போட்டாள்.

மறுபடியும் பொங்கி வந்த சிரிப்பை அடக்குபவள் போல் ஒரு கையால் வாயைப் பொத்திக்கொண்டு ''இதோ ஆச்சு ஸிஸ்டர்.'' என்று சாவித்திரி வேலையைத் தொடர்ந்தாள். மாதவன் காண்டீனுக்குள் நுழைந்தான். ரத்தன் ஸிங் கேட்டருகில் இருந்த ஸ்டூலில் சென்று அமர்ந்து கொண்டான்.

மார்கரேட் ரெஜிஸ்தரைத் திறந்து நோட்டம் விட்டாள். ஏழு ஆபரேஷன் கேஸ்கள் பதிவாகி இருந்தன. முந்தா நாள் அட்மிட் ஆகியிருந்த அந்த பஞ்சாபிப் பெண்ணுக்கு இன்றைக்கு ஸ்டெரிலைஸேஷன், அபார்ஷனுடன்.

அவள் ரெஜிஸ்தரை மூடினாள். பதிவாகாமலே, திடுதிப்பென்று நினைத்துக்கொண்டு வந்தாற்போல அபார்ஷன் கேஸ்கள் எட்டரை மணியிலிருந்து வர ஆரம்பிக்கும்.

டாக்டர் மெஹ்தா படு கெட்டிக்காரி. யாரையும் சங்கடப் படுத்தும்படியான கேள்விகளைக் கேட்கமாட்டாள். ஃபீஸ் கொடுக்கத் தகுதியிருக்கிறதா என்பது மட்டும் தான் அவளுடைய கவலை. அந்தக் கவலை கூட மார்கரெட்டின் பொறுப்பில் இருந்தது. மார்கரெட்டைத் தாண்டி பேஷண்ட் உள்ளே நுழைந்துவிட்ட பிறகு டாக்டர் மெஹ்தா சர்க்கரைக் கட்டியாக இருப்பாள். பாபத்தைக் கரைக்கவோ, கரைத்துப் பாபத்தைச் சுமக்கவோ தடுமாறிக் கொண்டு வந்து நிற்கும் பெண்களை மிக சொற்பமான வார்த்தைகளில் தெளிய வைத்துவிடுவாள். பெண்ணினத்துக்கு சேவை செய்வதற்கே தான் பிறவியெடுத்ததாக உருகும் அவளுக்கு, அந்த ஐந்து நிமிஷ வேலையை, முளையைக் கிள்ளி எறியும் லாகவத்துடன் செய்யும் அந்த அனாயாச வேலையை மிகப் பெரிய கைங்கர்யமாக பாவித்து நன்றியுடன் பேஷண்டுகள் எழுநூறு ரூபாயை யோசிக்காமல் நீட்டுவதைப் பார்க்க மார்க ரெட்டுக்கு ஆச்சரியமாக இருக்கும்.

தெரிந்தோ தெரியாமலோ இக்கட்டில் மாட்டிக் கொண்டு விடும் பணவசதி உள்ள பெண்களுக்கு டாக்டர் மெஹ்தா ஆத்மார்த்த சினேகிதி. ''நானிருக்க பயமேன்?'' என்று அபயஹஸ்தம் காட்டும் தெய்வம்.

''ஓ டோண்ட் பாதர்! சந்தேகம் தட்டினவுடன் என்னிடம் வந்து விடு. நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்கிற க்ரீன் ஸிக்னல்.

முதல் தடவையாக உள்ளே நுழையும் பேஷண்டின் முகத்திலிருக்கும் பயமும் தயக்கமும் அடுத்த தடவை அடியோடு இருக்காது. ப்யூட்டி பார்லருக்குள் நுழைகிற சரளம் நிமிர்ந்த பார்வையில் இருக்கும்...

''எக்ஸ்க்யூஸ் மீ ஸிஸ்டர்!''

மார்கரெட் நிமிர்ந்தாள்.

''யெஸ்?''

''அபார்ஷன் செய்துக்கணும், டாக்டர் மெஹ்தாவிடம்''

''எத்தனை மாசம்?''

''இரண்டு.''

''முதல் குழந்தையா?''

''இல்லை இரண்டாவது.''

''எழுநூறு ரூபாயாகும்.''

''தெரியும். பெயர் நமீதா. வயது 25'' மார்கரெட் விவரங்களை எழுதிவிட்டு நிமிர்ந்தாள்.

முகம் அழகாக இளமையாக இருந்தது. மிஸஸ் நமீதா என்று அவள் குறித்துக் கொண்டாலும் இவள் கல்யாணமானவளா என்ற சந்தேகம் வந்தது. முதல் குழந்தையைப் பெற்றாயா, கலைத்துக் கொண்டாயா என்ற கேள்விக்குறியுடன் அவளை உட்காரச் சொல்லிவிட்டு முந்தா நாள் அட்மிட் ஆகியிருந்த பஞ்சாபிப் பெண்ணைப் பார்க்கச் சென்றாள். மாதவன் நாயர் யாருக்கோ நாஷ்டா டிரேயை எடுத்துக்கொண்டு போனான். அவளைப் பார்த்து, ''ஆபரேஷன் கேசுக்குக் கொடுக்க மாட்டேன் பயப்படாதீங்க!'' என்றான்.

மூன்று வருஷங்களுக்கு முன் இங்கு கான்டீன் துவங்கியபோது இவனுடைய பனியனுக்கு அடியில் மார்புக்கூடு தெரியும். இப் பொழுது மார்பு விரிந்து சதைப் பிடிப்பாக அமர்ந்து டிரிம்மான வெள்ளைச் சீருடையில் சாவித்திரியின் கவனத்தைக் கலைக்கிறான். இங்கு எல்லாருக்கும் சம்பளம் அதிகம். டாக்டர் மெஹ்தா வாங்கிக் கொள்வதில் மட்டும் தாராளமில்லை. கொடுப்பதிலும் தாராளம்.

படியளப்பவனின் கருணையினால் யாரும் வாயைத் திறப் பதில்லை. இங்கு வரும் மேம்ஸாபுகளைப் பற்றி மட்டும் தான் கையை வாய் மேல் பொத்திக் கொண்டு சாவித்திரி வம்பளப்பாள்.

ஆபரேஷனுக்குத் தயாராக பஞ்சாபிப் பெண் உட்கார்ந்திருந் தாள். உடம்பு கட்டுமஸ்தாக இருந்தது. பணக்காரப் பெண்ணைப் போல் இருந்தாள்.

''இந்த ஆபரேஷனுக்குப் பிறகு நிச்சயம் கர்ப்பம் ஏற்படாதில்லே?''

''ஏற்படாது''

''நல்லவேளை ஒவ்வொரு மாசமும் பயந்துபயந்து...''

''வசதி உள்ளவங்க ஏன் பயப்படறீங்க?''

அவள் பதில் சொல்லாமல் விட்டத்தைப் பார்த்தாள்.

''எத்தனை குழந்தைங்க உங்களுக்கு?''

''ஒண்ணுதான்!''

''பின்னே எதுக்கு பயம்?''

''ஸிஸ்டர்! டாக்டர் வந்துட்டாங்க!'' என்று சாவித்திரி குரல் கொடுத்தாள். மார்கரெட் விசுக்கென்று கிளம்பினாள்.

சிவந்த மெலிந்த உடம்பில் டாக்டர் மெஹ்தா பதவிசாகக் கைத்தறிப் புடவை கட்டியிருந்தாள். ஒரு நிரந்தர கருணைப் புன்னகையை முகத்தில் படர விட்டிருந்தாள்.

''குட்மார்னிங் டாக்டர்!''

''குட்மானிங் மார்கரெட்.. ரீடாவைத் தயார் பண்ணியாச்சா?''

''பண்ணியாச்சு, அந்தம்மாவுக்கு ஏதாவது கர்ப்பத்திலே கோளாறா?''

''இல்லையே?''

''ஒரே ஒரு குழந்தை தானாம் ஸ்டெரிலைஸ் பண்ணிக் கிறாங்க?''

டாக்டர் மெஹ்தா மேம்போக்காகச் சிரித்தாள்.

''நீயும் நானும் இதைப்பத்தியெல்லாம் கவலைப்படக்கூடாது. நான் யாரையும் கேள்வி கேக்கிறதேயில்லே! இன்னிக்கு ஒரு கேஸ் வரும் அபார்ஷனுக்கு. கொஞ்சம் அட்வான்ஸ்ட் ஸ்டேஜ். இரண்டு நாள். ஆப்ஸர்வேஷன்லே வைக்கணும். அட்மிட் பண்ணிடு. பிரேமான்னு பேரு.''

''சரி டாக்டர்.''

டாக்டர் கம்பீரமாக நடந்து ஆபரேஷன் தியேட்டருக்குள் நுழைந்தாள். பணம் சுளை சுளையாகக் கிடைக்கும்போது நீயேன் வாயைத் திறக்கிறாய் என்று தோன்றிய நினைப்பை உடனடியாகத் துடைத்து ''என் பெயர் பிரேமா'' என்று சொல்லிக்கொண்டு நின்ற அந்தப் பெண்ணைக் கவனித்தாள்.

''எத்தனை மாசம் உங்களுக்கு?'' என்றாள் திடுக்கிட்டு.

''ஆறு''

''பின்னே எப்படி...?''

''இதப்பார் நர்ஸ். டாக்டர் மெஹ்தாகிட்ட எல்லாம் பேசியாச்சு. நேரா வந்து அட்மிட் ஆயிடச் சொன்னாங்க.''

மார்கரெட் உதட்டைக் கடித்தபடி ரெஜிஸ்தரில் எழுதிக்கொண்டு காலியாக இருந்த அறைக்கு அழைத்துச் சென்றாள்.

அறைக்குள் நுழைந்தவுடன் பிரேமா மெல்லிய குரலில் சொன்னாள்.

''என்ன செய்யறது நர்ஸ். என் புருஷன் ரொம்ப மோசம், வேற ஒரு பொம்பளையோட சினேகம் வெச்சுக்கிட்டிருக்கான். என்னை அடிக்கிறான் உதைக்கிறான். அவன் குழந்தையை நான் ஏன் சுமக்கணும்?''

அவள் பிறகு அவன் எப்படி உதைத்தான், அடித்தான் என்று விஸ்தாரமாக வர்ணித்தாள். கண்களில் நீர் மல்கிற்று.

''திடீர்னு போன மாசம் பிறந்த வீட்டுக்கு விரட்டிட்டான். நான் என்ன செய்வேன்?''

மார்கரெட் அவளை மெல்லிய பரிதாபத்துடன் பார்த்தாள். வயிறு பெரிதாக இருந்தது. நன்றாக வளர்ந்திருக்கும் குழந்தை.

''டாக்டர் கலைச்சுடறேன்னு சொன்னாங்களா?''

''ஆமாம், எத்தனை செலவானாலும் சரி, இந்தக் குழந்தை வேண்டாம்னு எங்கம்மாவே சொல்றாங்க.'' அவள் முகத்தில் இருந்த தீவிரம் வினோதமாக இருந்தது.

''இத்தனை நாள் ஏன் பேசாம இருந்தீங்க? ஆரம்பத்திலேயே கவர்மென்ட் ஆஸ்பத்திரியிலே ஃப்ரீயா பண்ணிக்கிட்டிருக்கலாமே?''

''அசட்டுத்தனம் பண்ணிட்டேன் ஸிஸ்டர். இப்பக் கஷ்டமா?''

''கஷ்டம்தான், குழந்தை வளர்ந்துட்டதில்லே!''

''டாக்டர் மெஹ்தா சுலபமா பண்ணிடறேன்னு சொன்னாங்க!''

''அவங்க சொன்னா சரிதான்!'' திடீரென்று அவளுள் ஒரு சீற்றம் பொங்கிற்று. மேற்கொண்டு ஏதும் பேசாமல் அவள் தன் இருப்பிடத்துக்குச் சென்றாள். சட்டப்படி இருபது வாரத்துக்குட்பட்ட கர்ப்பத்தைத்தான் கலைக்கலாம்.

''சுலபமாக் கலைச்சுடறேன்னு சொன்னாங்க!''

இந்தப் பெண்ணின் கர்ப்பம் நிச்சயம் இருபத்தி ஐந்து வாரங்களுக்கு மேல் இருக்கும். பணத்தைக் கண்டால் டாக்டர் மெஹ்தா என்ன வேண்டுமானாலும் செய்வாள் என்கிற எரிச்சல், வேலையை கவனிக்க விடாமல் நமுநமுவென்று அரித்தது. கிளினிக்கில் யாராவது கேட்டால், ''அந்தப் பெண்ணுடைய கஷ்டத்தைப் பார்க்க சகிக்கவில்லை. வேண்டாத குழந்தையைப் பிறக்க அனுமதிக்கிறதை

விடக் கலைச்சுடறது தேவலை'' என்பாள் டாக்டர் மெஹ்தா காருண்யம் வழியும் முகத்துடன்- 'கலை'க்கும் 'கொலை'க்கும் அட்சர வித்தியாசம்தான் என்கிற நினைப்பில்லாமல்...

அவள் சட்டென்று நிமிர்ந்தாள். டாக்டர் மெஹ்தா நின்றிருந்தாள். ''பிரேமாவுடைய கேஸை ரெஜிஸ்டர்லே நோட் பண்ணி கிட்டிருக்கியா?'' என்றாள்.

''ஆமாம் டாக்டர்.''

''பதினெட்டு வாரத்தில் எம்.டி.பி.என்று போடு.''

''வளர்ந்த குழந்தையாயிருக்கும் டாக்டர் அது!'' என்றாள் மார்கரெட் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள இயலாமல்.

''ஆமாம் என்ன செய்வது? முட்டாள் பெண், இப்பொழுது வந்திருக்கிறாள். இது ஒருவகை மெர்ஸி கில்லிங்குனு வெச்சுக்கோ!'' டாக்டர் மெஹ்தாவின் முகத்தில் அபரிமிதமான கருணை வழிந்தது.

''பொறுப்பில்லாத பெண் அவள். குழந்தையை நிச்சயம் அவளுக்கு வளர்க்கப் பொறுமை இருக்காது. பிறந்து கஷ்டப்பட விடறதைவிட குழந்தையைப் பிறக்காம செஞ்சுடறது தப்பில்லே!''

எது சரி, எது தப்பு என்று மிகத் தெளிவாகத் தெரிந்து வைத்திருந்த நிச்சயம், டாக்டர் மெஹ்தாவின் பார்வையிலும் பேச்சிலும் தெரிந்தது. மறுபடியும் அவள் ஆபரேஷன் தியேட்டருக்குள் நுழைந்து கொண்டதும் மார்கரெட் கான்டீனுக்குச் சென்றாள். தலையை வலித்தது.

கான்டீன் வாசலில் சாவித்திரி மாதவனுடன் அரட்டை அடித்துக் கொண்டு நின்றிருந்தாள். மார்கரெட்டைக் கண்டதும் ''நமக்கென்ன வந்தது விடு'' என்றாள்.

''என்ன விஷயம் சாவித்திரி?''

''ஒண்ணுமில்லே நர்ஸ், புதுசா வந்திருக்கில்லே கேஸ், அதைப் பத்தி...?''

''என்ன அதைப்பத்தி...?''

''அது சொல்றதெல்லாம் சுத்தப்பொய். அதுக்குக் கல்யாணமே ஆகல்லே. கலைச்சுக்கறதுக்கு முதல்லே யார்கிட்டயோ போய் அவங்க கலைக்காமயே ஃபீஸ் வாங்கிவீட்டுக்கு அனுப்பிட்டாங்க. அது தெரியாம இது பேசாம இருந்து இப்ப இங்கு வந்து நிக்குது,''

கண்களில் நீர் மல்க பிரேமா சொன்ன கதை ஞாபகம் வந்தது. மார்கரெட் திடுக்கிட்டாள்.

''நிஜம் போல எப்படிப் பேசினாள்!''

''ஆ பாவி முண்டைங்க. என்ன வேணாபேசும்! எதுக்காவது பயம் இருக்கணும். பயமே இல்லாம போன பிறகு நீ என்ன தான் செய்யமாட்டே? கொலைகாரப் பாவிங்க,''

மெல்லிய வியப்புடன் மார்கரெட் சாவித்திரியைப் பார்த்தாள். இப்பவும் மார்புச் சீலை இடுப்பைச் சுற்றியிருந்தது. மார்பின் பிளவுகள் கீழிறங்கிய ரவிக்கையின் கழுத்தில் தாராளமாகத் தெரிந்தன. அதைப் பற்றிய பிரக்ஞையே இல்லாத தெளிவுடன் அமர்ந்திருந்தாள்.

''யார் தான் பாவியில்லே?'' என்று மாதவன் நாயர் சிரித்தான்.

''நீயும் நானும் கூடத்தான் பாவிகள், அவங்க காசை வாங்கிகிட்டு...''

''நான் எந்தப் பாவத்தையும் பண்ணல்லே. கிடைக்கிற கூலிக்குக் கண்ணை மூடிக்கிட்டு வேலை செய்யறேன். இன்னிக்கு ஆபரேஷன் ஆகுதே நர்ஸ், அந்தம்மாவுக்குப் புருஷன் இறந்து போய் ஆறு மாசம் ஆச்சு, இப்ப இரண்டு மாச கர்ப்பத்தோட வந்து நிக்குது. கர்ப்பத்தை கலைச்சு ஆப்பரேஷன், நிரந்தரமாப் பாவம் பண்ண.''

''சாவித்திரி! இந்தப் பொம்பளை வம்பெல்லாம் கான்டீனுக்கு கொண்டு வராதே...''

சாவித்திரி வெறுப்புடன் சிரித்தாள் ''இப்பப் பொம்பளை ஆம்பளை வித்தியாசமெல்லாம் இங்க வந்து வயித்தைக் கழுவிக்கிறதோடு சரி.''

மார்கரெட் எழுந்தாள். மாதவன் கொடுத்த சூடான தேநீர் மனதுக்கு ஒரு செயற்கை தெம்பை அளித்தது.

டாக்டர் மெஹ்தாவும் அவளுடைய பேஷண்டுகளும் எந்தப் பாவத்தில் உழன்றால் நமக்கென்ன என்று வைராக்கியம் ஏற்பட்டது. பத்து வருஷங்களுக்கு முன் இந்த கிளினிக்கில் நான் இருந்திருந்தால் நானும் அவர்களுள் ஒருத்தியாக, பாவ புண்ணியங்களைப் பற்றின வீண் சர்ச்சையில் சிக்கிக் கொள்ளாமல் இருந்திருப்பேன் என்று தோன்றிற்று.

''ஸாரி மார்கரெட் என்னுடைய அப்பா நம்ம கல்யாணத்துக்கு சம்மதிக்கல்லே... கருவை இப்பவே கலைச்சிடு...''

என்றவனின் முகத்தில் காறித் துப்பி பழியை சிலுவையாய் சுமந்து தினமும் நாலரை மணிக்குக் கிளினிக்கை விட்டுக் கிளம்பினால் தான், ஜோஸஃப் ஸ்கூலிலிருந்து வருவதற்குள் போய்ச் சேர முடியும் என்று பறப்பாய்ப் பறந்து வாழ்வை ஒரு கேள்வியாக்கி...

எது சரி எது தப்பு?

அவள் அயாசத்துடன் கண்ணை மூடி மேஜைமேல் முகத்தைக் கவிழ்த்துக் கொண்டாள். அந்தந்தத் தருணத்துத் தீர்மானங்களே சரி. அந்தந்தத் தருணத்து பயங்களே நிஜம்.

கருணைகளில் சில கொலைகளும் கொலைகளில் சிறு காருண்யமுமாய் ஜனித்து சிதைந்து கருவுறும் தருணங்கள்...

**தினமணிக்கதிர் 1989**

